# "வேத நெறி"

## கடவுளை அணுகும் வழி.

### கடவுள் இயல்.

வினா:—நம்மையும் நம் வீட்டையும் நம் நாட்டையும் காப்பது யார்?

விடை:—அரசன்.

வினா:—அவன் நம்மை எப்படிக் காக்கிறான்?

விடை:— அதிகாரிகளை நியமித்து நம் ஒவ்வொருவரையும் ரக்ஷிக்கிறான்.

வினா:—அவன் எத்தனை அதிகாரிகளை நியமித்திருக்கிறான்?

விடை:— மந்திரிமுதல் வெட்டியான் வரையில் கணக்கில் அடங்காத அதிகாரிகளை நியமித்திருக்கிறான்.

வினா:—கோடிக்கணக்கான பிரஜைகளாயுள்ள நம்மையும் எண்ணிறந்த அதிகாரிகளையும் சுவாதீனத்தில் வைத்துக்கொண்டு எப்படி ஒரே ஏற்பாட்டுடன் அரசன் அரசாங்கத்தை நடத்துகிறான்?

விடை:— சட்டபுத்தகங்களை ஏற்படுத்தி அதன் விதிகளுக்கு அடங்கியே பிரஜைகளாகிய நாமும் அதிகாரிகளும், அரசனாகிய தானும் நடந்துவருவதால் அரசாங்கம் நடைபெறுகிறது. சட்ட விதிகளை யார் மீறினாலும்

அதற்குச் சிக்ஷை அச்சட்டத்திலேயே ஏற்பட்டிருக்கிறது. அரசனே மீறிவிட்டால் அரசாங்கமே தவறி விழுந்து விடும். ஆகையால்தான் அரசன் வெகு ஜாக்கிரதையுடன் தானும் சட்டத்துக்கு உட்பட்டு நீதியுடன் நடந்து வருகிறான்.

வி:— நம்மைக் காக்கிறதற்காக நாம் அரசனுக்கு என்ன கைம்மாறு செலுத்துகின்றோம்?

விடை:— ஆறில் ஒரு கடமை யென்னும் வரியைச் செலுத்துகின்றோம்.

வி:—அதை அரசர் என்ன செய்கிறார் ?

விடை:— அதிகாரிகளுக்கு ஜீவனமாகக் கொடுக்கிறார்.

வி:— நாம் பூமியில் சாகுபடி செய்து அதிகாரிகளுடைய சம்பளத்துக்காக வரி கொடுக்காமல் இருந்தால் அதிகாரிகள் உத்தியோகம் செய்து நம்மை ரக்ஷிக்க முடியுமா ? நம்முடைய வீட்டையும் நெல்லையும் காக்கமுடியுமா ?

விடை:— முடியாது அவர்களும் நம்மைப் போல ஜீவனத்துக்காகச் சாகுபடி செய்ய ஆரம்பிக்கவேண்டும். அப்பொழுது காப்பவர் இல்லாததால் எவர் சாகுபடியும் நடக்காது. ஆதலால், பிரஜைகள் தங்கள் கடமையைச் செலுத்தி, அதிகார புருஷர்கள் அவ்வத்துறையில் பிரஜைகளை ரக்ஷித்து, பரஸ்பரம் க்ஷேமத்தைக் கோரிக்கொண்டு, எல்லோரும் பொதுவான சட்டத்துக்கு அடங்கி ஒழுகுவதே நாட்டிற்கு க்ஷேமகரமான அரசாங்கம்.

வினா:—எறும்பு முதல் எண்ணிறந்த பிராணிகள் அடங்கிய உலகனைத்தையும், அவ்வுலகைக் காக்கும் அரசனையும், ஆகாயத்திற் காணப்படும் சந்திர சூரிய நக்ஷத்திரங்களையும் பாதுகாக்கும் அரசன் யார்?

விடை:—அவனே கடவுள்.

வினா:— இவைகளை எல்லாம் படைத்தவன் எவன்?

விடை:—படைத்தோனும் அவனே.

வினா:— அவனுடையே அரசாங்கத்தில் எவ்வளவு உலகங்கள் இருக்கின்றன?

விடை:—கணக்கே இல்லை. ஆகாயத்தில் நம் கண்ணாற் காணும் ஜோதி மண்டலங்களும், இன்னும் நம் கண்ணிற்குப் புலப்படாத எல்லையற்ற உலகங்களும், அவ்வீசனது ஆக்ஷிக்கு உட்பட்டனவாம். எட்டுக்கால் பூச்சி தானே நூலை நூற்று, திரும்பத் தன்னைத் தானே தனக்குள் அடக்கிக் கொள்வது போல் அவ்வீசன் ஒரு ஸமயத்தில் நம் முலைகைப் போலக் கோடிபங்கு பெரிதாயுள்ள எண்ணிறந்த பிரம்மாண்டங்களையும் சிருஷ்டித்துப் பிறகு, ஒரு காலத்தில் எல்லாவற்றையும் தனக்குள்ளேயே ஐக்யம் செய்துகொண்டு விடுகிறான். திரும்பவும் ஒரு காலத்தில் அவ்விதமாகவே அநேக பிரம்மாண்டங்களை உண்டுபண்ணிவிடுகிறான். படைத்த ஒவ்வொரு பொருள்களையும் கர்ப்பத்திலுள்ள சிசுமுதல், சட்ட விதிப்படி வெகு ஜாக்கிரதையாக ரக்ஷிக்க ஏற்பாடு செய்திருக்கிறான். அவனது ராஜ்யத்துக்கு ஆதியுமில்லை, அந்தமுமில்லை.

வினா :— அவ்வீசனுக்கு உருவமுண்டா? உருவமில்லையா ?

விடை:— அவன் அருவமாயும், உருவமாயும் இருவிதமாகவும் இருப்பான்.

வினா:—அருவம் என்றால் என்ன?

விடை:—கண்களுக்குப் புலப்படக்கூடிய ஓர் உருவமில்லாத தன்மை அருவம்.

வினா:—கண்களுக்குப் புலப்படாமல் ஒரு பொருள் இருக்குமா ?

விடை:— குளிரும், காற்றும், மின்சாரமும், கண்களுக்குப் புலப்படாவிட்டாலும் இருக்கின்றனவன்றோ! புஷ்பத்தின் வாஸனை கண்களுக்குப் புலப்படாவிட்டாலும் இருக்கின்றதல்லவா ? கற்கண்டில் இருக்கும் தித்திப்பும், படிக்காரத்தில் இருக்கும் கசப்பும் கண்களுக்குப் புலப்படாவிட்டாலும் இருக்கின்றனவன்றோ ! ஸங்கீத ராகம் கண்ணுக்குப் புலப்படாது ஆனால் செவிக்குப் புலப்படும். பச்சை, சிவப்பு முதலிய வர்ணங்கள் காதுக்குப் புலப்படாதாயினும் கண்ணுக்குப் புலப்படும். சூடு, குளிர், இவை செவிக்குப்புலப்படாது; தொடுதலுக்குப்புலப்படும். இவ்விதம் உலகிலுள்ள எப்பொருளும், கண், காது, மூக்கு, நாக்கு, தொடுதல் இவைகளில் அநேகமாய் ஏதாவது ஒன்றுக்குப் புலப்படுவதாகவே இருக்கிறது. கடவுள் இவைகளெல்லாவற்றையும் சிருஷ்டித்து, இவைகளுக்குமேல் நிற்பவன். ஆதலால் இவைகளுக்கு அடங்கிப் புலப்படான். அதுவே அவனுடைய அருவத்தன்மை.

வினா:— அப்படியானால் அவனுக்கு உருவம் எப்படி ஏற்படும்?

விடை:— நம்மிடம் ஈசனுக்குள்ள கருணையால் ஏற்படும். மின்சாரம் தந்திக் கம்பியில் வரும்பொழுது அருவமாய் இருப்பினும், ஓர் கண்ணாடி மூடியையும், காற்றடக்கமான சிறு இரும்புக் கம்பியையும், அதனுடன் சேர்ப்பின் கண்ணுக்கு ஒளிவீசும் ஓர் ஜோதியாய் விளங்குவதுபோல், அன்பர்களின் ஹிருதயமென்னும் மூடியையும், அன்பென்னும் கொடியையும் பூட்டியவுடனே, ஈசன் ஜகஜ்ஜோதியாய், திவ்ய மங்களரூபமாய் விளங்குகின்றான். சூரியன் ஏரிகளிலும் ஆறுகளிலும், குளங்களிலும் சமுத்திரங்களிலும் உள்ள தண்ணீரைத் தனது கிரணங்களால் இழுத்துக்கொள்ளும் பொழுது உயரச்செல்லும் அந்நீர் கண்களுக்குப் புலப்படாமல் அருவமாய் இருப்பினும், பிறகு நம்மிடமுள்ள கருணையால் அது நீலமேகமாகிப் பொழியும் பொழுது உருவமாக மாறுவது போலவும், ஆண்டவன் உருவமாயும், அருவமாயும் இருக்கிறான்.

வினா:— அன்பர்களுக்கு எவ்வித உருவத்துடன் அவன் அருள் புரிகின்றான்?

விடை:— வைணவர்களுக்கு நீலமேகவண்ணனை ஸ்ரீமந்நாராயண மூர்த்தியாகவும், சைவர்களுக்கு ஸ்படிகம்போல் தூயவெண்ணிறத்தோடு ரிஷபாரூடனை அரனுடைய மூர்த்தியாகவும் அருள்புரிகின்றான். இதையே பொய்கையாழ்வார்,

“அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள்ளூர்தி
உரைநூல் மறையுறையுங் கோவில்—வரைநீர்
கருமம் அழிப்பு அளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார்மேனி யொன்று.”

என்று அருளி இருக்கிறார்.

வி:— கடவுள் ஒன்றே யாகிலும் மும்மூர்த்திகள் என்று பெரியோர்கள் கூறக்கேட்டிருக்கின்றேமே; அது எங்ஙனம் ?

விடை :— அக்கடவுள் ஒருவரே உலகத்தைப் படைக்கும்பொழுது பிரம்மா உருவத்தையும், உலகத்தைக் காக்கும்கால் நாராயண உருவத்தையும், உலகனைத்தையும் தன்னுள் ஐக்யம் செய்துகொள்ளும் பொழுது சிவனுருவத்தையும் மேற்கொள்கிறார்.

இதையே திருமங்கையாழ்வார் தமது திருநெடுந்தாண்டகம் என்னும் நூலில், ... ... ...

"பாருருவி நீரெரிகால் விசும்புமாகிப்
பல்வேறு சமயமுமாய்ப் பரந்து நின்ற
ஏருருவில் மூவருமே என்ன நின்ற
இமையவர்தம் திருவுருவே றெண்ணும் போது
ஓருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ,
ஒன்றுமா கடலுருவ மொத்து நின்ற
மூவுருவுங்கண்டபோதொன்றாஞ் சோதி,
முகிலுருவ மெம்மடிக ளுருவந்தானே,"

என்று திருவாய்மலர்ந்தருளி இருக்கிறார்.

மேலும்,

"ஒருவனாயுலகத்தே நின்ற நாளோ
வோருருவே மூவுருவமான நாளோ
கருவனாய்க் காலனைமுன் காய்ந்த நாளோ
காமனையும் கண்ணழலால் விழித்த நாளோ
மருவனாய் மண்ணும் விண்ணுந் தெரித்த நாளோ
மான்மறிக்கை யேந்தியோர் மாதோர் பாகந்
திருவினான் சேர்வதற்கு முன்னோ பின்னோ
திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே,"

என்றார், திருநாவுக்கரசு நாயனார் என்ற அப்பர் பிரானும்

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்காளத்தி திருத்தாண்டகத்தில் :—

"நாரணன் காண் நான்முகன் கா
ணால் வேதன் காண்,
ஞானப் பெருங்கடற்
கோர் நாவாயன்ன,
பூரணன் காண் புண்ணியன் காண்
புராணன்றான் காண்
புரிசடை மேல் புனலேற்ற
புனிதன்றான் காண்.
சாரணன் காண் சந்திரன் காண்
கதிரோன்றான் காண்
தன்மைக் கட்டானேகாண்டக்கோர்க் கெல்லாம்,
காரணன் காண் காளத்தி காணப்பட்ட
கணநாதன் காணவனென் கண்ணுளானே",

என்றும்,

திருவாய்மொழியில் நம்மாழ்வார்
" முனியே நான்முகனே
முக்கண்ணப்பா",

என்றும் திருவாய் மலர்ந்தருளி இருக்கின்றார்கள்.

———

# அணுகவியல்.

வினா:—சிவனை நாம் ஏன் வழிபடவேண்டும் ?

விடை:— நாம் பிறந்துகொண்டும் இறந்துகொண்டும், இதனிடையில் அநேக பாவங்களுக்கும் கஷ்டங்களுக்கும் ஆளாகிச் சுழன்றுகொண்டிருப்பதால் இப்பிறவி—மரணம் என்னும் சக்கரத்தினின்று விடுபடுவதற்காகவே, சிவனை வழிபடவேண்டும். பிறப்புக்குக்காரணம் காமம். இறப்புக்குக் காரணம் காலன். காமனைக் கண் அழலால் எரித்தவரும் காலனைக் காலால் கடிந்தவரும், சிவனே. ஆதலால் அவரை வழிபட்டு இப்பிறப்பு இறப்புச் சுழலிலிருந்து விடுபட்டு என்றும் அழிவிலாச் சிவமயமாய் நிலை நிற்கவேண்டும்.

வினா:— சிவமென்னும் சொல்லுக்குப் பொருள் என்ன ?

விடை :— மங்களம், சுபம், சிரேயஸ் என்பவை சிவம் என்னும் சொல்லுக்குப் பொருளாம்.

ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள்

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறு வாரச்சேர்வே,"

என்று அருளியுள்ளார்.

வினா:— நாரணன் என்ற சொல்லுக்கு என்ன பொருள்?

விடை:—நரர்கள் என்ற மனிதர்கள் எல்லோருக்கும் அடைவிடம் என்று பொருள்.

வினா:— எல்லா உலகங்களுக்கும் ஒரே அரசனாய் அனாதிகாலமாய் அரசாக்ஷி புரியும் கடவுளின் அரசாங்கத்துக்குச் சட்டபுத்தகம் எது?

விடை:—அதுவே வேதம், ஒருநாட்டிற்கு சிலகாலத்திற்குத் தகுதியாக ஏற்படுத்தப்பட்டவை ஆங்கிலச் சட்டம் முதலிய அரசாங்கச்சட்டங்கள். வேதமென்னும் சட்டமோ ஆதியந்த மில்லாது எக்காலத்தும் எல்லா உலகங்களும் அவைகளிலுள்ள எல்லா ஜீவராசிகளும் உய்யுமாறு ஏற்பட்டது.

வினா:- அவ்வேதம் எப்பொழுது ஏற்பட்டது?

விடை:- அனாதியான அரசாங்கத்தின் சட்டமானதால் அதுவும் அனாதியே. அதற்கும் ஆதி கிடையாது. ஈசன் எப்படி அனாதியோ அதுபோல் அவனது சட்டமாகிய வேதமும் அனாதியே. ஈசனுடைய ச்வாஸமே வேதம் என்று வேதமே கூறுகின்றது. எப்படி ச்வாஸமில்லாமல் பிராணி இல்லையோ, பிராணி இல்லாமல் ச்வாஸம் இல்லையோ, அதுபோலவே, வேதம் இல்லாமல் ஈசன் இல்லை; ஈசன் இல்லாமல் வேதம் இல்லை. ஆகலால் ஈசனைப்போல் வேதமும் அனாதி. இதுபற்றியே திருநாவுக்கரசு நாயனாரும் ஈசனுடைய ஸ்வரூபத்தைத் தோத்தரிக்கும் பொழுது,

"வேதியா வேத கீதா விண்ணவரண்ணு வென்றென்
றோதியே மலர்க ளேவியொருங்கிநின் கழல்கள் காணப்
பாதியோர் பெண்ணை வைத்தாய் படர்சடை மதியஞ் சூடும்
ஆதியே யால வாயி லப்பனே யருள்செய் யாயே."

என்று திருவாய்மலர்ந்து அருளினார்.

வினா:— முன்னே கூறப்பட்ட "அரன் நாரணன்... ...." என்ற திருமங்கையாழ்வார் பாசுரத்தில் "உரை யில்மறை" என்ற தொடரில் "மறை" என்பதற்குப் பொருள் என்ன ?

விடை:—மறை என்றால் வேதம். மறைந்த பொருளை உணர்த்துவது மறை. எங்கும் நிறைந்து இருப்பினும் நம்முடைய கண், காது முதலியவைகளால் அறிந்து கொள்ள முடியாமல் இருப்பதனால் மறைந்து நிறைந்து இருக்கும் ஈசனேயும் அவனை அணுகுவதற்கு நமது புத்தியால் அறிந்துகொள்வதற்குக் கூடாமல் மறைந்திருக்கும் வழியையும் உணர்த்தலால் மறையே வேதமாகும். அரசாங்கத்தில் சட்டமுறை தவறாது தழைத்து ஓங்க ஓங்க, உலகத்துக்கு க்ஷேமம் என்பது பற்றியே திருஞானசம்பந்த சுவாமிகளைப்பற்றிய ஸ்தோத்திரப் பாவில்,

"வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு புரவுவாம்",

என்று பெரியோர் கூறி இருக்கின்றார்கள். வேதத்தில் சொன்ன அனுஷ்டானங்களைக் கைவிட்டவர்கள் மகா பாவத்துக்கு ஆளாகிறார்கள் என்று திருஞானசம்பந்த சுவாமிகளும் "வைதிகத்தை ஒழுகாதவர்", "மறை வழக்கமிலாத மாபாவிகள்", என்று திருவாலவாய்த் திருப்பதிகத்தில் அருளி இருக்கிறார். சட்டத்தை மீறி

நடந்தவர்கள் சிக்ஷைக்குப் பாத்திரமாக வேண்டியவர்களே. அவர்களைச் சிக்ஷிப்பதென்ற தன் சட்டத்துக்கு ஈசனும் அடங்கி நடந்து, அவர்களைச் சிக்ஷிக்கிறான். வேதச் சட்ட முறைகளைத் தவறாது அனுஷ்டித்து வருகிறவர்களைப் பாவங்களிலிருந்து நீக்கி, தன் மயமாக்கி அவர்களுக்குச் சுயராஜ்யம் அளித்து விடுகிறான். அந்நிலையில் நாம் பாபங்களையும் பிறப்பையும் இறப்பையும் கடந்து சிவமயமாய் நிற்கின்றோம்.

---

# வழி இயல்.

வினா:— ஈசனுடைய அரசாங்கத்தில் அதிகாரிகள் யார்?

விடை:—முப்பத்து முக்கோடி தேவர்களும், பித்ருக்களும்.

வினா:— அவர்களிருப்பிடம் யாது?

விடை:-முறையே வடக்குத் திக்கிலுள்ள தேவலோகமும், தெற்குத் திக்கில் உள்ள பித்ருலோகமும்.

வினா:—அவர்கள் பேசும் பாஷை ஏது?

விடை:—தேவ பாஷை.

வினா:— அவர்கள் நம் ஊனக்கண்ணுக்குப் புலப்படுவார்களா?

விடை:—காற்றையும் மின்சாரத்தையும் போலப் புலப்படமாட்டார்கள். மந்திர சக்தியும், த்யான சக்தியும் உடையவர்களின் கண்ணுக்குப் புலப்படுவார்கள்.

வினா:— இவ்வீசனது அரசாங்கத்துக்கு நாம் செலுத்தும் வரி யாது?

விடை:—தேவர் கடனும், பித்ருகடனும்.

வினு:—நம்மையெல்லாம் காப்பதற்காக அவ்வதிகாரிகளுக்கு எதை ஜீவனமாக ஏற்படுத்தி இருக்கிறுர்?

விடை:—தேவ யக்ஞங்களேயும், பித்ரு யக்ஞங்களேயுமே. திருவள்ளுவ நாயனுரும் திருக்குறளில்

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லுனென்றுங்
கைம்புலத்தா றோம்ப றலே."

என்று கிருஹஸ்தாச்ரமத்தைக் கூறுமிடத்துச் சொல்லி இருக்கிறுர்.

வினு:—தென் புலத்தார் என்ருல் யார்?

விடை:—தெற்குத் திக்கிலுள்ள லோகத்தில் இருக்கும் பித்ருக்கள். ஆதலால்தான் வேதியர்கள் பித்ரு சடங்குகளேச் செய்யும்பொழுது தென்தோளான வலது தோளில் பூணூலேப் போட்டுக்கொள்வதையும் ஸந்தியாவந்தனம், யாகம் முதலிய தெய்வச் சடங்குகளேச் செய்யும்போது அதனே வட தோளாகிய இடது தோளில் போட்டுக் கொள்வதையும் பார்க்கிறேம்.

வினு:—வேதியர்கள் உலகத்துக்குச் செய்யவேண்டிய முக்கியக் கடமை என்ன?

விடை:—வேதமோதி வெகு நியமத்துடன், மந்திர சக்தியை ரக்ஷித்து, உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளுக்கும், பிரதிநிதியாக ஈச்வரனுல் அதிகாரம் கொடுக்கப்பட்ட இந்திரன், வருணன், வாயு, அக்னி முதலிய தேவர்களுக்குச் செலுத்தவேண்டிய கடமைகளேச் செலுத்தி, உலகிற்கு ஈசனது அருளேப் பெறுவிப்பதே.

ஏனைய மூன்று வர்ணங்களிலும் மற்ற அநுலோம பிரதிலோம ஜாதிகளிலும் பிறந்தவர்களுக்குக் கைத்தொழில்கள், வியாபாரம், விவசாயம், அரசு, தொண்டு முதலிய உலகியல்பான காரியங்களில் விசேஷமாக ஈடுபட்டுச் செய்யுமாறு வேதம் குறிப்பிடுவது போல் மந்திர சக்தியை முக்கிய காரியமாகக்கொண்டு, ஈசனது அரசாங்கத்துக்கு வரிக்கொப்பான தெய்வ கர்மங்கள், பித்ரு கர்மங்கள் என்ற கடமைகளைச் செலுத்தி, பிரபஞ்ச முழுவதிற்கும் தொண்டு புரிவதையே வேதியர்களின் விசேஷமான கடமையாக வேதம் குறிப்பிடுகிறது.

வினா:—இக் கடமைகள் உலகினில் சரிவர நடைபெறுவிடில் என்ன ஏற்படும் ?

விடை:— அரசாங்கத்துக்கு வரிகொடாப் பிரஜைகளின் கதியே உலகத்துக்கு ஏற்படும். ஆகையால்தான் இக்காலத்தில் அக்ரமயுத்தங்களும், வியாதிகளும், நாசங்களும், பஞ்சங்களும், இன்னும் அநேகவிதமான கஷ்டநஷ்டங்களும் மலிகின்றன.

வினா:—வேதியர்கள் செய்யவேண்டிய தெய்வச் சடங்குகள் யாருடைய க்ஷேமத்துக்காக ?

விடை:— உலகத்திலுள்ள ஈ, எறும்பு, எல்லாச் சமயங்களையும் சேர்ந்த மாந்தர்கள் உள்பட, எல்லாப் பிராணிகளுடைய க்ஷேமத்துக்காகத் தான். ஏனைய வர்ணங்களில் பிறந்தவர்களும் தங்கள் தொழிலுக்கு அதிக இடையூறு இல்லாமல் ரிஷிகளால் விதிக்கப்பட்ட புராண மந்திரங்களைக் கொண்டு சிறிதளவில் தெய்வச் சடங்குகளையும், பித்ருசடங்குகளையும், செய்யலாம். தேவலோக

பாஷை ஸம்ஸ்க்ருதமாதலின், எவ்வருணத்தார் தெய்வச் சடங்குகள் செய்யினும், அத்தேவ பாஷை வசனங்களைக் கொண்டே செய்கிறார்கள்.

வி:—திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் பதிகத்திலிருந்து மேற்கூறப்பட்ட, மறைவழக்கம் என்னும் சொல்லுக்குப் பொருள் யாது?

விடை:— வேதத்தின் கர்மகாண்டத்தில் ஆசாரம், அநுஷ்டானம் என்ற இருவகைப்பட்ட தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளில் ஆசாரமாவது தனது உடலுக்கும், மனதுக்கும் தெய்வீகமான சுத்தியைத் தரும் நடத்தை. அநுஷ்டானமாவது வேத விதிப்படி தேவர்கள், பித்ருக்கள், மாதா, பிதா, ஆசார்யன், பெரியோர், அதிதிகள் இவர்களுக்கு நடத்தப்பட வேண்டிய சடங்குகள். தமிழ் அறநூல்கள் ஆசாரத்தை ஒழுக்கம் என்றும் அநுஷ்டானத்தை வழக்கம் என்றும் சொல்லும். ஆதலால் மறை வழக்கம் என்பது வைதிக அநுஷ்டானம் என்று பொருள்படும்.

வி:—ஒருவன் வேதத்தின் ஆணையான தெய்வ பித்ருகர்மங்களைச் செய்யாது, வேண்டுமென்றே மீறி ஈசனிடத்தில் மாத்திரம் பக்தி செய்கிறேன் என்று சொன்னால் அவன் கதி யாது?

விடை:—ஓர் அரசன் தன் கட்டளையைச் செய்யாது மீறி நடந்து, தன்னை மாத்திரம் ஸ்துதி செய்யும் தன் வேலைக்காரனை எப்படி நடத்துவானோ அதே கதிதான் இவனுக்கும்.

வி:— வேதத்தால் விதிக்கப்பட்ட கடமைகளைச்

செய்யாது ஈசனிடம் ஞானம் பக்திகளை மாத்திரம் பூரா வது செய்யலாமா?

விடை:—செய்யலாம்.

வினு:—எவன் செய்யலாம்?

விடை:— துறவி.

வினு:—அவன் மாத்திரம் எப்படி இக்கடமைகளை விட்டுவிடலாம்?

விடை:—நம் நாட்டுப் பிரஜைகளில், வீடு வேண்டும் என்பவன் வீட்டுவரி செலுத்தவேண்டும். நிலம் வேண்டும் என்பவன் நிலவரி செலுத்தவேண்டும். வட்டி, லாபம், வேண்டும் என்பவன் வருமானவரி செலுத்த வேண்டும். வீடு, நிலம், வட்டி லாபம், ஒன்றும் வேண்டாம் என்று ராஜீநாமா கொடுத்துவிட்டவன் ஒரு வரியும் கொடாமலேயே அதிகாரிகளிடம் போய் நிர்ப்பயமாய் உட்காரலாம். அதுபோலவே இல்வாழ்வான் தனக்கும், தன்னை அண்டினவர்களுக்கும் நிழல் வேண்டும், பொருள் வேண்டும், சூரியனது வெப்பம் வேண்டும், அக்னியினது உஷ்ணம் வேண்டும், வருணனது நீர் வேண்டும், இலை வேண்டும், காய்கறி வேண்டும் என்னும் அபேக்ஷை இருக்கும் வரையில் தேவர் கடனைச் செலுத்தியே ஆக வேண்டும். இவ்வுலகிலுள்ள மாந்தர்களால் ஒரு ஜீவமே இலையையாவது, தான்யத்தையாவது எவ்வளவு ரஸாயன விக்ஞானிகள் சேர்ந்தாலும் சிருஷ்டித்துவிட முடியாது. ஒரு முனிஸிபாலிடியில் இருப்பதற்காக முனிஸிபல் வரியும், ஒரு ஜில்லாவில் வசிப்பதற்காக ஜில்லா போர்டு வரியும், ஒரு நாட்டில் வசிப்பதற்காக அரசாங்க வரியும் செலுத்துவது

போலவே இப்பிரபஞ்சத்தில் நாம் வசிப்பதற்காகத் தேவர் கடமையையும் செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றோம். இதுவே ஹிந்து மதமென்னும் வேத நெறியின் சிறப்பான கோள்கை. ஸன்யாஸியோ, தனக்கு வீடும் வேண்டாம், குழந்தைகளும் வேண்டாம், பந்துக்களும் வேண்டாம்; உணவு கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் தான் சமையல் செய்து கொள்வதில்லை, வஸ்திரம் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் தான் வாங்கிக்கொள்வதில்லை, உடல் இருந்தாலும், விழுந்தாலும் தான் கவலைப்படுவதில்லை, ஓர் இலையையும் கிள்ளுவதில்லையென்று எல்லாவற்றையும் துறந்துவிட்டபடியால் அவன் தேவர்களுக்கோ, பித்ருக்களுக்கோ செலுத்தவேண்டிய கடமை ஒன்றுமே இல்லை. ஈசனிடம் ஒன்றுபடுவதற்கு நிஷ்டை செய்வதைத் தவிர வேறு கடமை இல்லை. அவன் செய்யும் உலக ஸேவையும் அதுவேதான். அல்லும் பகலும் இறைவனையே நாடி வேறு ஆசையையும் மறந்து ஈசனருளைப் பெற்றவன் ஒருவன் இவ்வுலகிலிருந்தானேயானால் அவனது தரிசனத்தினால் உலகிலுள்ள மாந்தர் அடையும் நன்மையே பொருள் முதலிய எல்லாவற்றையும்விட மேலானது. ஆதலால்தான் ஸன்யாஸி தேவ யக்ஞத்துக்கும், பித்ரு யக்ஞத்துக்கும் அவச்யமான யக்ஞோபவீதம் என்னும் பூணூலையும், சிகை என்னும் குடுமியையும், பஞ்சகச்சம் என்னும் ஆடை உடுக்கும் விதியையும் துறந்து, தன் ஆசையும், அதற்குரிய கடமையும் முடிந்தது என்ற நிலையை அடைகிறான்.

விசேஷமான பித்ரு கர்மங்களில் சிகையிலும், கச்சத்திலும், வேத விதிப்படி தெய்வ கர்மத்தைக் காட்டிலும் சில மாறுபாடுகள் உள்ளன.

வினு:—கிருஹஸ்தாச்ரமி ஏன் சிகை, கச்சம், உபவீதம் இவைகளைத் தரிக்கவேண்டும்?

விடை:—வேத விதிப்படி இவைகள் மூன்றும் தெய்வ பித்ரு கர்மங்களுக்குச் சாதனமாதலால்தான்.

வினு:—தெய்வ பித்ரு கர்மங்களை அவன் ஏன் செய்யவேண்டும்?

விடை:—நீர், வெப்பம், நிழல், உணவு, குழந்தை, பெண்டிர் முதலியன வேண்டுமென்ற ஆசை இருப்பதால்.

வினு:—இவைகளுக்காகத் தேவர் கடன் செய்வானேன்?

விடை:—இப்பொருள்களில் ஒன்றையேனும் மனிதன் செய்யமுடியாது. மனித சக்திக்கும் எட்டாத தேவசக்தியினுல் சிருஷ்டிக்கப்பட்ட பொருள்களை நாம் அனுபவித்துக்கொண்டு பிரபஞ்ச அரசாங்கத்தின் வேதச் சட்டப்படி அவைகளுக்குக் கைம்மாருன கடமைகளை நாம் செலுத்தாவிடின் நாம் திருடர்களாவோம். இதையே ஸ்ரீ கிருஷ்ணபகவான் பகவத்கீதையில் 3-ஆம் அத்யாயம் 12-ஆவது சுலோகத்தில்,

"யக்ஞங்களால் ஆராதிக்கப்பட்ட தேவர்கள் திருப்தி அடைந்து, காற்று, வெப்பம், நீர், செடி, கொடி, முதலியவற்றின் மூலமாக மாந்தர்களுக்கு இஷ்டமான போக சுகங்களைக் கொடுக்கின்றார்கள். அப்படி அவர்களால் தரப்பட்ட வஸ்துக்களில் அவர்களுக்கு உரிமையானவைகளைச் செலுத்தாமல் தான் மட்டும் உபயோகப்படுத்திக் கொள்ளுகிறவன் திருடனுகவே ஆகிறான்"

என்று கூறி இருக்கிறார். மற்றும் பகவான்கீதை அத்யாயம் 10, 11-வது சுலோகங்களில்:—ஆதியில் சிருஷ்டி காலத்தில் பகவான் யக்ஞத்தோடு கூடவே உலகமாந்தர்களை சிருஷ்டித்தார். பிறகு மாந்தர்களை நோக்கி இவ்விதம் கூறலானார்:—

"இந்த யக்ஞத்தைக் கொண்டு நீங்கள் அபிவிருத்தியை அடையுங்கள். உங்கள் அபிவிருத்திக்காக நீங்கள் வேண்டும் பொருள்களையெல்லாம் உங்களுக்கு ஓர் காமதேனுவாய் நின்று இது கொடுக்கட்டும். இந்த யக்ஞத்தைக் கொண்டு தேவர்களுக்கு க்ஷேமகரமான காரியங்களைச் செய்து வைப்பீர்களாக. அவர்கள் (நீர், வெப்பம் முதலியவற்றால்) உங்களுக்கு க்ஷேமகரமான காரியங்களைச் செய்து வைப்பார்களாக. (இவ்விதம் ஓர் நல்ல அரசனுடைய அதிகாரிகளும், பிரஜைகளும் போலப் பரஸ்பரம் க்ஷேமகரமான காரியங்களைச் செய்து கொண்டு கிரமமாகப் பரமசிவனை அணுகுதல் என்பதிலாக உள்ள) பெரும் பேற்றை அடையுங்கள்" என்று கூறி இருக்கிறார்.

[தெய்வகர்மங்களுக்கு வேத விதிப்படி அவச்யமான மந்த்ரசக்தியும், ஆஹார ஆசாரசுத்தியும், கொஞ்சமாவது நிலைத்திருப்பதற்காகவே, உடலில் காம உணர்ச்சி உதிப்பதற்கு முற்காலமாகிய எட்டு வயதிலேயே கிரமமாக வர்ணாச்ரம தர்மங்கள் ஆரம்பிக்கப்பட்டு, விதிக்கப்பட்டிருக்கின்ற பித்ரு கர்மங்களுக்கு ஆதாரமான வம்சசுத்திக்காகவே, கன்னிப் பருவத்திலேயே மணத்தல், விதவைகள் விசேஷ நியமத்தோடு இருத்தல், முதலியன சிறப்பாக நமது வேத நெறியில் விதிக்கப்பட்டிருக்கின்றன. எந்தக் கஜானாவில் சட்ட முறைப்படி எதைச் செலுத்தி

னும், அது அரசனுக்கே உரித்தாவதுபோல், எத்தேவர்கட்கோ, எப்பித்ருக்களுக்கோ, எப்பெரியோருக்கோ வேத நெறிப்படி அர்ப்பணம் செய்யினும் அது எல்லாம் வல்ல ஈசனுக்குத் திருப்பணியே.]

வேத விதிப்படி அந்தணர் நியமத்துடன் ஓதிய மந்திரத்தைக் கொண்டு வானவரைக் குறித்து முக்கியமாய் ஆவின்பால், நெய் முதலிய திரவியங்களை ஹோமம் செய்தலென்னும் யக்ஞத்தினால் உலகஸாம்ராஜ்யம் செழிக்கும். "ஹரஹர மஹாதேவ", என்ற அரன்புகழ் ஒலிக்கும். ஆதலின் ஸ்ரீ குமாரக் கடவுளின் அம்சமாகிய திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் கீழ்வருமாறு வாழ்த்துப் பதிகம் பாடியருளியிருக்கின்றார்.

" வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனுமோங்குக
ஆழ்க தீயதெ லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே".

---

ஸ்ரீ ஜனார்தந பிரிண்டிங் ஒர்க்ஸ் (லிமிடெட்,)
டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம்.